றங்களைக் காண்போருக்கு அவற்றின் கருப்பொருள் விளங்கினாலன்றி அவை பயன்படமாட்டா வாகலானும், அவ்வகைத் தோற்றங்களுக்கு ஆதாரமாயுள்ள அறிவு உணர்ச்சிகளை விருத்திசெய்யும் குருவினது தோற்றமே ஏற்றமுள்ளதாகலானும், தமது தீர்மானத்தையும் காட்டிக், 'குருவாய் வருவாய் அருள்வாய்' என முடித்துக் காட்டினார் என்க. இதனாலேயே ஒரு சாரார், யோகஞானத்தால் உணரப்பட வேண்டிய காட்சிகளைப் பூதக்கண்ணால் அறியுமாறு அமைப்பது முறை பிறழ்வாகுமென வாதித்துக் கூறுகின்றனர். அன்னார் கூற்றிற் றவறொன்று மில்லையென வுரைக்கலாமாயினும், அன்னார் கூறுவதே முற்றுஞ் சரியெனக் கூறுவதும் பொருந்தாது. ஏனெனில்,

> " தம்பக்க மன்றிய மற்றொரு பக்கத்தைச் சார்ந்து, அதனை
> நம்பக்க மாக்கலா காதென் றுரைக்கு நவிரமதை
> எம்பக்க மாக்கிக் கடந்தால் இருவிரு மெண்ணுநகர்
> உம்பக்க மாகும் ; விரைவிற் சமரச மோங்குவிரே "

—**சத்தி நிபாதக் கோவை.**

என்ற அருள் வாக்கின்படி, இருவர் தம் பக்கத்தையும் தழுவி நோக்கினா லன்றிச் சமரசம் ஏற்படுவதில்லை யென்றறிக. இதனாலேயே தற்காலத்து எழுந்துள்ள ஸமாஜங்களும் ஸங்கதன்களும் பண்டைய மதங்களைப்போலச் சிறப்படைவதில்லை யென்க. அதனால், இருபட்சங்களையும் தீர நோக்கும் ஆற்றலைப் படைப்பதே அருளை யாள்வோருடைய உரிமையாதல்பற்றி, இருகட்சியினரது கொள்கைகளையும் எடுத்துக்காட்டி அவற்றிற் சிறப்பு வாய்ந்ததையும் குறித்துச் செல்லவேண்டுமென்ற ஒழுங்கில், அருணகிரிநாதர் இம் மறையில் அவ்வகை முடிவுபடுத்திக் கூறினாரென்றறிக.

---

குறிப்பு :—32-வது மறையின் விசேடக் குறிப்புகளின் இறுதியில் அடியில் வருவதனையும் கூட்டிப்படிக்க.

இனிக் கலையைச் சாஸ்திரமெனப் பொருள்கொண்டு தலைஊடலை எனப் பதம் பிரித்துச் 'சொற்போரில் வெற்றிகொள்ளல் அளவாகின்றவிடல் தகாது' எனக் கூறுவாரும் உளர். அவ்வுரை 'கொலை மறுத்தல்' என்னும் தலைப்புக்கு இயையாமை அறிக.